Regd: No. M.7897 NAVAMANI (Tamil Daily) MADRAS Phone No. 76199

"நவமணி"
சந்தா விகிதம்

1—9—74 முதல் தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7-50 | ரூ. 8-00 |
| 3 மாதம் | ரூ. 22-50 | ரூ. 24-00 |
| 6 மாதம் | ரூ. 45-00 | ரூ. 48-00 |
| 1 வருடம் | ரூ. 90-00 | ரூ. 96-00 |

# நவமணி

ஆசிரியர்: சோலை



கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

மலர் 16 இதழ் 219 ★ சென்னை 22—4—76 வியாழன் ★ வெளியூர் 23—4—76 வெள்ளி ★ 4 பக்கம் 25 காசு

## கல்யாணசுந்தரம் தரும் புதிய புகார் பட்டியல்

# கருணாநிதி, மாதவன் நண்பர்கள் பெற்ற 6 கோடி ரூபாய்

## விசாரணை கோரி கவர்னரிடம் மகஜர்

சென்னை, ஏப். 22—கருணாநிதி அரசு தமது அந்திமக் காலத்தில் தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக் கழகம்மூலம் வேண்டியவர்களுக்கு 6 கோடி ரூபாயை அள்ளிக் கொடுத்திருக்கிறது. விசாரணை செய்யாமல் இவ்வளவு பெரும் தொகையை விநியோகிக்கக்கூடாது என்று தமிழக கவர்னரை கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் கல்யாணசுந்தரம் கேட்டுக் கொண்டு இருக்கிறார்.



ஆலந்தூர் தொழில் அதிபரும், கருணாநிதியின் நண்பருமான கதிரேசனுக்கு 30 லட்சம் ரூபாயும், மாதவனோடு வெளிநாடு சென்றுவந்த நல்லபெருமாள் தொழில நிறுவனங்களுக்கு 39 லட்சம் ரூபாயும், சென்னை கீதா ஓட்டல் நிறுவனத்திற்கு 27 லட்சம் ரூபாயும் அனுமதிக்கப்பட்டிருப்பதாக கல்யாண சுந்தரம் கூறியிருக்கிறா.

இவர்கள் வாங்கிய பணம் முறையாகச் செலவழிக்கப் பட்டிருக்கிறதா என்று விசாரணை செய்யவேண்டும் என்றும் அவர் கோரியிருக்கிறா.

தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக் கழகம் (தமிழ்நாடு இண்டஸ்டிரியல் டெவலப்மெண்ட் கார்ப்பரேஷன) மூலம் கருணாநிதி அரசு தமது கடைசி காலத்தில் யார் யாருக்கு எவ்வளவு லட்சம் ரூபாய் ஒதுக்கீடு செய்து இருககிறது என்ற பட்டியலை கல்யாணசுந்தரம் கவர்னரிடம் அளித்தார்.

அந்தப் பட்டியலில் கூறப்பட்டு இருப்பதாவது;

★ நாடாளுமன்ற தி. மு. கழக உறுப்பினர் சிட்டிபாபுவின சிபாரிசின் மீது செங்கல்பட்டு தமிழ்நாடு மெட்டல் இண்டஸ்டாககு 18 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய்.

★ முன்னாள் அமைச்சர் மாதவனோடு வெளிநாடு பயணம் மேற்கொண்ட எஸ். நல்லபெருமாளின கம்பெனி என்று கூறப்படும் ராணிப்பேட்டை காகிதத் தொழிற்சாலைக்கு 24 லட்சம் ரூபாய். இந்தத் தொழிற்சாலையை மதுரை மாவட்டம் மேலூருககு அருகில் மாறுதல்செய்ய உத்தேசிக்கப் பட்டிருக்கிறது.

## புகாரி

★ சென்னை புகாரி புளூலகூனுக்காக 25 லட்சம் ரூபாய் கொடுக்கப் பட்டுவிட்டது. என்றாலும் இந்தத் தொகை பெற்றதற்கான தொழில் அகம் இன்னும் முடிவடையவில்லை.

★ திண்டுக்கல்லில் உள்ள ஆயில், உரத் தொழிற்சாலை நிறுவனத்திற்கு 21 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய். இந்தத் தொழிற்சாலை பிரபல தொழில் அதிபர் மருதபிள்ளையின் நெருங்கிய உறவினரான லட்சுமணப் பிள்ளைக்குச் சொந்தமானது.

★ பெண்ணாடம் அருணா சர்க்கரை ஆலைக்கு 10லட்சம் ரூபாய். இந்த ஆலை மருதப் பிள்ளைக்குச் சொந்தமானது. பத்து லட்சம் ரூபாயும் கொடுக்கப்பட்டதாகத் தெரிகிறது.

## பெருமாளும் நல்ல பெருமாள்

★ சிங்கம்புணரி பி. என். எஸ். ராமசாமி அண்டு பிரதர்சுக்காக 75 ஆயிரம்ரூபாய். இந்தக் கம்பெனி மாதவனின் நண்பருக்குச் சொந்தமானது.

★ சென்னை இண்டஸ்ட்ரியல் அக்ரிகல்சரல் கன்சல்டன்ட் நிறுவனத்திற்கு 2 லட்சத்து 70 ஆயிரம் ரூபாய். இந்த நிறுவனம் மாதவனின் நண்பரான எஸ். நல்லபெருமாளுக்குச் சொந்தமானது என்று கூறப்படுகிறது.

★ ராணிப்பேட்டை அரவிந்த் டிஸ்டிலெரீசுக்கு 23 லட்சம் ரூபாய். இந்த நிறுவனம் மருத பிள்ளைக்குச் சொந்தமானது என்று கூறப்படுகிறது.

## காடு வெட்டி

★ திருப்பத்தூர் சி. முனுசாமி கவுண்டருக்கு ஒரு லட்சத்து 50 ஆயிரம் ரூபாய். திருப்பத்தூர தொகுதியின் முன்னால் சட்டமன்ற உறுப்பினரின் சிபாரிசின் பேரில் கொடுக்கப்பட்டது.

★ ஒரு காடு வெட்டியின் சிபாரிசின் பேரில் புதுக்கோட்டை டெக்ஸ்டைல்ஸ் மில்லுக்கு 15 லட்சம் ரூபாய் ஒதுக்கீடு செய்யப்பட்டிருக்கிறது.

## அப்பப்பா... நாச்சியப்பா

★ திருப்பத்தூர், தர்மபுரியில் உள்ள சதர்ன் சால்வென்ட் எக்ஸ்ட்ராக்ட் நிறுவனத்திற்கு 11 லட்சம் ரூபாய், இந்த நிறுவனத்தில் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் நாச்சியப்பன் பங்குதாரர் என்று தெரிகிறது,

## ராம்... ராம்...

★ செங்கல்பட்டு ராம் பைப் கம்பெனிக்கு 5 லட்சம் ரூபாய். இந்தக் கம்பெனி நாடாளுமன்ற தி. மு. கழக உறுப்பினர் வீரய்யனுக்குச் சொந்தமானது என்று கூறப்படுகிறது.

★ திருவான்மியூர் நடராஜா பேப்பர் மில்லுக்கு 11 லட்சத்து 70 ஆயிரம் ரூபாய். வட ஆற்காடு மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் முருகையன் சிபாரிசின் பேரில் கொடுக்கப்பட்டதாகத் தெரிகிறது.

★ ராணிப்பேட்டை ஸ்கேல் லிமிடெட் கம்பெனிக்கு 26 லட்சம் ரூபாய் தமிழக தொழில் வளர்ச்சிக் கழகத்தின் முக்கிய பிரமுகருக்கு இந்தக் கம்பெனியில் அதிக ஆர்வமும் அக்கறையும் உண்டாம்.

## மாதவன் நண்பர்

★ சென்னை ஆக்சிஜன் அண்டு அசிடெலின் கம்பெனிக்கு 14 லட்சம் ரூபாய், இந்தக் கம்பெனி மாதவனின் நண்பர் எஸ். நல்லபெருமாளுக்குச் சொந்தமானது என்று கூறப்படுகிறது.



★ மாதவனின் சிபாரிசின் பேரில் அண்ணா சாந்தி செங்கல் தொழிற்சாலைக்கு 2 லட்சத்து 85 ஆயிரம் ரூபாய்.

## ம. பொ. சி.யுமா?

★ ம. பொ. சி யின் குடும்பத்திற்குச் சொநதமானது என்று கூறப்படும் மதுரை அரசு அலுமினியம் தொழிற்சாலைக்கு ஒரு லட்சத்து 90 ஆயிரம் ரூபாய்.

★ திண்டுக்கல் ஸ்ரீ பாலாஜி டிராக்டர்ஸ் நிறுவனத்திற்கு 5 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய். ஸ்ரீ த. சிதம்பரம் ஆயில் இண்டஸ்ட்ரீசுக்கு 5 லட்சத்து 5 ஆயிரம் ரூபாய்.

இந்த இரண்டு நிறுவனங்களும் மாதவனின் நெருங்கிய நண்பர் என்று கூறப்படும் லட்சுமணப் பிள்ளைக்குச் சொந்தமானது.

★ நாடாளுமன்ற திமுகழக உறுப்பினர் உலக நம்பியின் சிபாரிசின் பேரில் ராணிப்பேட்டை ரோடுவேசுக்கு ஒரு லட்சத்து 70 ஆயிரம் ரூபாய்.

★ எம். ஏ. சிதம்பரம்செட்டியாரின் குமாரர் ஓ. சி. முத்தையாவுக்கு சவுத் இந்தியா மெய்ஜ் அண்டு அலைடு இண்டஸ்ட்ரீசுக்காக 30 லட்சம் ரூபாய்.

★ எம். ஏ. சிதம்பரம் குரூப் கம்பெனியான சென்னை சதர்ன் இந்தியா கார்ப்பரேஷனுக்கு 10 லட்சம் ரூபாய்.

## கதிரேசன்

★ ஆலந்தூர் தொழிலதிபர் டி. கே. கதிரேசனின் தமிழ்நாடு டிஸ்டிலரீஸ் அண்டு ஆல்கோஹாலின் (கிருஷ்ணகிரி) கம்பெனிக்கு 30 லட்சம் ரூபாய். இதில் பாய்லர்கள் வாங்குவதற்காக 2 லட்சத்து 74 ஆயிரம் ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பணம் முறைப்படி செலவழிக்கப்படவில்லை என்றும் சொந்த உபயோகத்திற்காக செலவழிக்கப்பட்டிருக்கிறதென்றும் தெரியவருகிறது.

## தோன்றாத் துணைவன்

★ வடலூர் நெய்வேலி செராமிக்ஸ் அண்டு ரிபிரேக்டரீஸ் நிறுவனத்திற்கு 2 லட்சத்து 80 ஆயிரம் ரூபாய். தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக் கழகத்தின் முக்கிய புள்ளி இந்த நிறுனைத்திற்குத் தோன்றாத் துணைவனும்.

★ முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் துரை முருகனின் சிபாரிசின் பேரில் ராணிப்பேட்டை மலாக் தோல் கம்பெனிக்கு 5 லட்சம் ரூபாய்.

## முத்தான முத்தல்லவோ?

★ நாடாளுமன்ற தி. மு. கழக முன்னாள் உறுப்பினர் அரூர் முத்துவுக்குச் சொந்தமானது என்று கூறப்படும் ஓசூர் திருமலை எலெக்ட்ரானிக நிறுவனத்திற்கு 21 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய்.

★ ஆலந்தூர் கதிரேசனுக்குச சொந்தமானது என்று கூறப்படும் டி. கே. இண்டஸ்ட்ரீசுக்கு ஒரு லட்சத்து 75 ஆயிரம் ரூபாய்,

## ஓ! கீதா!

★ ஒரு காலத்தில் காமராஜரின் நண்பரும் பின்னொரு காலத்தில் கருணாநிதியின் நண்பருமான சென்னை கீதா ஓட்டல் அதிபருக்கு 27 லட்சம் ரூபாய்.

★ சாதிக்பாட்சா சிபாரிசின் பேரில் திருச்சி ஓட்டல் அரிஸ்டோவுக்கு 15 லட்சம் ரூபாய்

★ தோப்பூர் திருவேங்கடத்தின சிபாரிசின் பேரில் வேலூர் ஜீலானி ஸ்டீல் ரோலிங் மில்லுக்கு 2 லட்சத்து 60 ஆயிரம் ரூபாய்

## சர்க்கரைப் பிள்ளை

★ ராணிப்பேட்டை அரவிந்த் டிஸ்டிலெரி லிமிடெட்டுக்காக 50 ஆயிரம் ரூபாய். இந்தக் கம்பெனி தமிழகத்தின் தனிப் பெரும் சர்க்கரைத் தொழில் மன்னர் மருதப் பிள்ளைக்குச் சொநதமானது என்று கூறப்படுகிறது.

★ திருச் செங்கோடு காமதேனு பேப்பர் அண்டுபோர்டு மில்லுக்கு 25 லட்சம்ரூபாய்.

★ சென்னை அரீப் அண்டுகோ ஓட்டலுக்காக 15 லட்சம் ரூபாய்.

## காண்டீபம் தொடுத்த காரணம் இதுவே?

★ ராஜ்யசபை தி. மு. கழக உறுப்பினர் எஸ். எஸ். மாரிசாமி காண்டீபம் நிறுவனத்திற்காக 3 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய்.

## கைலாசம் போன 60 லட்சம்

கோவை ஜனார்த்தன மில்லுக்கு 60லட்சம்ரூபாய் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. இந்த மில் கருணாநிதியின் நண்பரான காலஞ்சென்ற கைலாசக் கவுண்டருக்குச் சொநதமானது.

சென்னை அருணோதயா கெமிக்கல்சுக்கு 9 லட்சத்து 85 ஆயிரம் ரூபாய் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. இந்த நிறுவனம் சட்டமன்ற முன்னாள் உறுப்பினர் வீராசாமியின் உறவினருக்குச் சொந்தமானது என்று கூறப்படுகிறது,

எம். ஏ. சிதம்பரம் குரூப் நிறுவனமான சதர்ன் அக்ரி பரேன் லிமிடெட்டிற்காக 25 லட்சம் ரூபாயும், அடையாறு கேட் ஓட்டலுக்கு 25

(1-ம் பத்தி பார்க்க)

## அண்ணா தி. மு. க. செயற்குழு எம்.ஜி.ஆர் அறிவிப்பு

சென்னை ஏப் 22—அண்ணா தி. மு. கழக செயற்குழு மே 2ம் தேதி கூடும் என்று அண்ணா தி.மு.கழகப் பொதுச் செயலாளர் எம். ஜி. ஆர். அறிவித்துள்ளார்.

மே 2-ம் தேதி காலை அண்ணாதி. மு. கழக தலைமை அலுவலகத்தில் இந்தக் கூட்டம் நடைபெறும் என்றும் அவர் அறிவித்துள்ளார்.

பல முக்கிய அரசியல் விஷயங்கள் ஆராயப்படும் என்றுஅறிவிக்கப்பட்டுள்ளது.

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

லட்சம் ரூபாயும் ஒதுக்கீடு செய்யப்பட்டிருக்கிறது.

## 6 கோடி

இப்படி ஏறத்தாழ 6 கோடி ரூபாயை தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக் கழகம் வழங்கியிருக்கிறது. இவர்களில் பெரும்பாலோா ஆட்சியில் இருந்த தி. மு. கழகத்திற்கும், தி. மு. கழக அமைச்சர்களுக்கும் வேண்டியவர்கள் என்று பட்டியலைப பார்த்தாலே தெரியும்,

எனவே இதுவரை கொடுக்கப்பட்ட பணம் முறையாகச் செலவழிக்கப்பட்டிருக்கிறதா இனியும் பணம் கொடுப்பது அவசியம்தானா என்பதனைப் பரிசீலிக்க வேண்டும் நடந்துள்ள முறைகேடுகள் ஊழல்கள் மீது விசாரணை நடத்த வேண்டும் என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின தமிழ் மாநிலப் பொதுச் செயலாளர் எம். கல்யாணசுந்தரம் கவர்னரிடம் கூறியுள்ளார்.

## அன்பழகன் செயலாளர் கிருஷ்ணசாமியின் இரண்டாவது மனைவி வீட்டில் சோதனை

சென்னை, ஏப். 22— முன்னாள் அமைச்சர் அன்பழகனின் செயலாளர் கிருஷ்ணசாமியின் இரண்டாவது மனைவி வீட்டில் அதிகாரிகள் திடீர் சோதனை நடத்தினார்கள்.

இதுபற்றிய விவரமாவது: தி மு கழகத்தின் முன்னாள் அமைச்சர் அன்பழகனின் செயலாளர்களில் ஒருவரான கிருஷ்ணமூர்த்தியை லஞ்ச ஊழல் ஒழிப்பு போலீசார் கைது செய்துள்ளனர்.

கிருஷ்ணசாமியின் முதல் மனைவி கவுசல்யா என்பவரின் பெயரில் லைசென்ஸ் உள்ளஒரு மருந்து கடையை அதிகாரிகள் திடீர் சோதனை நடத்தினார்கள் அப்பொழுது பல தஸ்தாவேஜுகளை கைப்பற்றினார்கள். இந்த மருந்துக்கடை சிந்தாரிப்பேட்டையில் இருக்கிறது (இந்த செய்தியை நவமணி ஏற்கனவே வெளியிட்டிருந்தது.)

கிருஷ்ணசாமியின் இரண்டாவது மனைவியின் வீடு சென்னை நுங்கம்பாக்கம் ஏரிக்கரை பகுதியில் இருக்கிறது. இரண்டாவது மனைவி 'சாந்தி' மான 'குமாரி'யாக விளங்குபவராம். இவருடைய வீட்டை லஞ்ச ஒழிப்பு அதிகாரிகள் திடீர் சோதனை நடத்தினார்கள், சோதனையில் சில முக்கிய தஸ்தாவேஜுகள் சிக்கியதாகத் தெரிகிறது. அவை வருமான வரி சம்பந்தமான தஸ்தாவேஜுகள் என்று கூறப்படுகின்றன. அதிகாரிகள் கைப்பற்றிய தஸ்தாவேஜுகளைக்கொண்டு அதிகாரிகள் புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

கிருஷ்ணசாமிக்கு பானுமதி என்ற காதலியும் இருந்தாராம். அவர் தன்னைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று கிருஷ்ணசாமியை வலியுறுத்தி வந்தாராம். பின்னர் பெரியவர்கள் தலையீட்டின்பேரில் இருவரும் அன்பாக அழகாகப் பிரிந்து விட்டனராம்.

## வரதட்சணை கேட்ட மாப்பிள்ளைக்கு விலங்கிட்டு தெருவில் ஊர்வலம்

ராம்பூர், ஏப். 22—வரதட்சணை கேட்ட புது மாப்பிள்ளையையும், அவரது தந்தையையும் போலீசார் விலங்கிட்டு தெருவில் அழைத்துச் சென்றனர்.

பெண் வீட்டார் திருமணத்துக்கு முன்பு வரதட்சணை தருவதாகக் கூறியிருந்தார்களாம்.

பெண் வீட்டார் சொன்னபடி வரதட்சணை வேண்டும் என்று தந்தையும்மகனும் வற்புறுத்தியிருக்கின்றனர். இது போலீசுக்கு தெரியவந்தது. போலீசார் உடனே சென்று அந்த இருவரையும் கைது செய்து விலங்கிட்டு கடைத் தெரு வழியாக போலீஸ் நிலையத்துக்கு அழைத்துச் சென்றனர்.

# மின்சார பற்றுக்குறை தவிர்க்க ஆர். வி. எஸ். யோசனை

சென்னை, ஏப். 22—மின் சாரப் பற்றக்குறையை தவிர்ப்பதற்கு கவர்னரின் ஆலோசகர் ஆர். வி. சுப்பிரமணியன் ஒரு புது யோசனை வெளியிட்டார்.

இந்திய எஞ்சினீயரிங் தொழில் சங்கத்தின் 2-வது வருடாந்திர பிராந்தியக் கூட்டத்தில் அவர் உரை ஆற்றினார்.

அவர் கூறியதாவது:

ஒவ்வொரு பிராந்தியத்தில் உள்ள மாநிலங்களின் பிரதிநிதிகளும் ஒன்றுகூடி எந்த இடத்தில் மின்சாரத்தை மலிவான செலவில் உற்பத்தி செய்யமுடியும்? எப்படி முதலீடு செய்யவேண்டும்? மின்சாரத்தை எந்த அளவில் பகிர்ந்துகொள்ள வேண்டும்? என்பது போன்ற விஷயங்கள் பற்றி ஆராய்ந்து முடிவு செய்யவேண்டும்.

உதாரணமாக அணைக்கட்டுகள் மூலம் மின்சாரத்தை உற்பத்தி செய்வதற்கான சாத்தியக் கூறுகள் அனைத்தும் தீர்ந்துவிட்டதாக வைத்துக் கொள்வோம். அதே நேரத்தில் மற்றொரு மாநிலத்தில் நீர் மின் உற்பத்திக்காக சாத்தியக் கூறுகள் இருந்தும், போதிய நிதி வசதி இல்லை என்று வைத்துக் கொள்வோம். அவ்வித மாநிலத்தில் நீர் மின்சாரத் திட்டங்களில் முதலீடு செய்வதில் தமிழகம் பங்கு ஏற்று, மின்சார வினியோகத்திலும் பங்கு பெறலாம். இதற்காக சம்பந்தப்பட்ட மாநிலங்கள் உடன்பாடு செய்து கொண்டால், பெரும் பயன் ஏற்படும் என்றார் ஆர். வி. சுப்பிரமணியன்.

தமிழ்நாட்டுக்கு கொடுப்பதாக வாக்களித்த 400 மெகாவாட் மின்சார சக்தியை சப்ளை செய்ய கேரளம் முன்வரும் என்று தாம் நம்புவதாக அவர் மேலும் குறிப்பிட்டார்.

# இருபது அம்ச திட்டத்தை அமல்படுத்த மூப்பனர் வகுத்துக்கொண்ட திட்டம்

சென்னை, ஏப். 22—பிரதமர் இந்திரா காந்தியின் பொருளாதார திட்டமான 20 அம்ச திட்டத்தை அமல்படுத்தும் அடுத்த திட்டம் ஒன்றை காங்கிரஸ் தலைவர் மூப்பனார் வகுத்துக் கொண்டுள்ளார்.

இந்த திட்டம்பற்றி நேற்று இரவு ராஜாஜி மண்டபத்தில் நடந்த புத்தக வெளியீட்டு விழாவில் மூப்பனர் பேசும் போது வெளியிட்டார்.



மூப்பனர் பேசியதாவது:—

பிரதமர் இந்திராவின் 20 அம்சத் திட்டத்தை நடைமுறைப்படுத்த வேண்டியது அனைவரின் கடமையாகும். இந்திரா காந்தி எடுத்துள்ள முயற்சிக்கு நாம் உறுதுணையாக இருப்போம் என்று நாம் உறுதி எடுத்துக்கொள்ள வேண்டும்.

நான் அதிகம் பேசுவதில்லையே என்று பலர் குறைபடலாம்.

பிரதமர் இந்திரா காந்தியின் 20 அம்ச திட்டத்தை வெற்றிகரமாக செயல்படுத்த அதற்கு அடுத்த திட்டம் ஒன்றை நானாக வகுத்துக் கொண்டு இருக்கிறேன்.

பேச்சைக் குறைத்துசெயலை அதிகப் படுத்த வேண்டும் என்பதுதான் அந்த திட்டம். அந்த திட்டத்தை நான் எனக்கு அமல்படுத்திக் கொண்டு வருகிறேன் என்றார்.

## கைத்தறி துணிகளுக்கு ரிபேட் சலுகை ரத்து?

சென்னை, ஏப். 22—கைத்தறி துணிகளுக்கு கொடுக்கப்பட்டு வரும் 'ரிபேட்' சலுகை ரத்து செய்யப்படும் என்று தெரிகிறது.

இதற்கு மாறாக நெசவாளர்களுக்கு நிரந்தரமான பயன் தரும் திட்டம் ஒன்று தயாரிக்கப்படும் என்றுஎதிர்பார்க்கப்படுகிறது.

பொங்கல், கிருஸ்துமஸ், தீபாவளி ஆகிய பண்டிகை நாட்களில் கைத்தறித்துணிகளுக்கு 10 சதவிகித ரிபேட் வழங்கப்படுகிறது.

இவ்வாறு 'ரிபேட்' அளிப்பது நெசவாளர்களுக்கு பயன் தரவில்லை என்று சொல்லப்படுகிறது.

மாஸ்டர் வீவர்களுக்குத் தான் இதனால் பலன் கிடைக்கிறது என்று கூறப்படுகிறது.

எனவே ரிபேட் முறையை ரத்து செய்துவிட்டு நெசவாளர்களுக்கு நிரந்தர உதவி கிடைக்கும் வகையில் திட்டம் ஒன்றை தயாரிக்க தமிழக அரசு முடிவு செய்திருப்பதாக தெரிகிறது.

# பஞ்சாலை அதிபர்களுக்கு ரகுநாத ரெட்டி கடும் எச்சரிக்கை

கோவை, ஏப். 22— பஞ்சாலைகளில் வேண்டுமென்றே லே-ஆப் விடும் ஆலை அதிபர்களுக்கு மத்திய தொழிலாளர் மந்திரி ரகுநாத ரெட்டி கடும் எச்சரிக்கை விடுத்துள்ளார்.

கோவையை அடுத்த சிங்காநல்லூரில் உள்ள ராதாராணி திரைப்பட அரங்கில் ஐ.என்.டி.யூ.சி. சார்பில் நடந்த ஊழியர் கூட்டத்தில் மந்திரி பேசினார்.

அவர் கூறியதாவது:

பஞ்சாலை அதிபர்கள் வேண்டுமென்றே உற்பத்தியைக் குறைக்கிறார்கள். லே-ஆப் விடுகின்றார்கள். இவ்வாறு செய்யும் ஆலை அதிபர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும்.

கோவை மாவட்டத்தில் உள்ளபஞ்சாலைதொழிலாளர்கள் பெரும் நெருக்கடிக்கு ஆளாகி இருக்கிறார்கள்.

தொழிலாளர் துயரங்கள் எனக்கு புரிகின்றது. இங்குள்ள ஆலை அதிபர்கள் வேண்டுமென்றே உற்பத்தியை குறைக்கின்றார்கள்.

## நஷ்டம் வருகிறதா?

காரணம் இன்றியே லேஆப் விடுகின்றார்கள். ஏன் என்று கேட்டால் நஷ்டம் வருகிறது என்று கூறுகிறார்கள்.

எதனால் நஷ்டம் ஏற்படுகிறது அதை எப்படி சரிசெய்வது என்பதை கூற அவர்கள் மறுக்கின்றார்கள்.

ஆலைகளில் நஷ்டம் வருகிறது என்றால் உங்களது ஆலை அதிபர்களது கணக்கை கொண்டு வாருங்கள்.

கணக்கை பார்ப்போம். அதன் பிறகு என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதை பற்றி பரிசீலிப்போம்.

அதை விடுத்து ஒருதலைப் பட்சமாக லே-ஆப் விடுவது சரியல்ல.

தொழில் நெருக்கடியை தீர்க்க முத்தரப்புக் குழுவொன்றை மத்திய அரசு அமைத்துள்ளது.

பஞ்சாலைகளில் நஷ்டம் ஏன் ஏற்படுகின்றது? அதை தீர்க்க என்ன வழி என்பதை ஆராய இந்த குழு அமைக்கப்பட்டது.

இந்த முத்தரப்பு குழுவில் தொழிற்சங்கத் தலைவர் ராமானுஜம், ஆலை அதிபர்கள், தொழிற்சங்க பிரதிநிதிகள் ஆகியோர் இடம்பெற்றுள்ளனர்.

இந்த குழுவிற்கு தலைவனாக நான் இருக்கின்றேன்.

நஷ்டம் என்று கூறுகிறீர்களே, அப்படி என்றால் உங்கள் கணக்கை கொண்டு வாருங்கள் என்று ஆலை அதிபர்களிடன் நான் கேட்டேன்.

ஆனால் இதுவரை யாரும் கணக்கை கொண்டுவரவில்லை.

### தில்லுமுல்லு

ஏனென்றால் அவர்கள் கணக்கு தில்லுமுல்லு கணக்காகத்தான் இருக்கும்

நான் கம்பெனி விவகார அமைச்சராக பணியாற்றி இருக்கிறேன்.

எனவே ஆலை அதிபர்களின் தில்லுமுல்லு என்னிடம் எடுபடாது.

### பல்லவி

எந்த ஆலை அதிபரை கேட்டாலும் நஷ்டம் வருகிறது; ஆலையை ஓட்ட முடியவில்லை என்ற ஒரே பல்லவியைத் தான் திரும்பத் திரும்பப் பாடுகிறார்கள்.

பிரச்னைக்கு தீர்வு காண பஞ்சாலைகளில் முழு உற்பத்தி திறனோடு இயங்க வேண்டும்.

### இரட்டிப்பு லாபம்

1973–74-ம் ஆண்டு ஆலை அதிபர்கள் இரட்டிப்பு லாபம் சம்பாதித்தார்கள். ஆனால் 1974–75-ம் ஆண்டு இதே ஆலை அதிபர்கள் லாபம் இல்லை என்று கூறுகிறார்கள்.

ஏன் லாபம் இல்லை என்று கேட்டால் நூல்தேங்கிக்கிடப்பதால் லாபம் இல்லை என்று கூறுகிறார்கள்.

ஆலை அதிபர்களின் சுயலாபத்திற்காகத்தான் செயற்கையாக நூல் தேக்கம் ஏற்படுத்தப்பட்டது.

லட்சக் கணக்கான தொழிலாளர்கள் பிரச்னைகளுடன் ஆலை அதிபர்கள் விளையாடுகின்றார்கள்.

இதைப் பார்த்துக்கொண்டு அரசு சும்மாயிராது.

முன்பு ஆலைகளில் நிறைய லாபம் கிடைத்தது. அந்தப் பணத்தை ஆலை அதிபர்கள் என்ன செய்தார்கள். இப்போது கடன் வேண்டுமென்று கேட்கின்றார்கள். கணக்கை காட்டுங்கள் என்றால் ஆலை அதிபர்கள் தயங்குகின்றார்கள். ஒருதலைப்பட்சமாக லே-ஆப் விடுகின்றார்கள், இது சம்பந்தமாக அரசு கடுமையான நடவடிக்கைகளை எடுக்கும்

வருகிற 24-ந் தேதி புது டெல்லியில் பஞ்சாலைபிரச்னை பற்றி விவாதிக்க முத்தரப்பு குழு கூட்டம் நடைபெறும்.

இவ்வாறு ரகுநாத ரெட்டி கூறினார்.

# வங்காள தேஷ்படை மீண்டும் சுட்டது

புதுடெல்லி, ஏப். 22— இந்திய எல்லைப்பாதுகாப்பு ரோந்துப்படைமீது பங்காள தேஷ் படை மீண்டும் சுட்டது, இந்த சம்பவம் மேகாலய பகுதியில் நடந்தது.

இந்திய ரோந்துப்படை தற்காப்புக்காக திருப்பிச் சுட்டது. இரு தரப்பிலும் ஆட்சேதம் ஏற்பட்டுள்ளது.

ஏற்கனவே திங்கள் அன்று முதல தடவையாக பங்களா தேஷ் இந்தியா மீது சுட்டது.

இப்போது நடந்த தாக்குதல் இரண்டாவது தாக்குதல் ஆகும்.

### ஆட்சேபம்

இது குறித்து இந்தியா இரண்டாவது பலத்தஆட்சேபனையை பங்களா தேஷ் தூதரிடம் தெரிவித்துள்ளது.

இரு நாடுகளுக்கு இடையே உறவு வளர முயற்சி நடக்கும் இந்த நேரத்தில் இப்படிப்பட்ட சம்பவம் நடப்பது வருத்தத்தையும், கவலையையும் அளிக்கிறது என்று இந்தியா தெரிவித்துள்ளது.

இப்படிப்பட்ட தாக்குதல் சம்பவங்கள் நடப்பதைத் தடுக்க உடனே நடவடிக்கை எடுக்கும்படி இந்தியா வற்புறுத்தியுள்ளது.

துப்பாக்கிப் பிரயோகம் பற்றி இருதரப்பு பாதுகாப்பு படை பிரதிநிதிகளும் சந்தித்து பேசுவதாக கூறப்படுகிறது.

# ஏழைகளுக்கு வீடு, நிலம் காலத்தின் கட்டளை: சவாண் பேச்சு

பாண்டிச்சேரி, ஏப். 22—தேசிய நீரோட்டத்திலிருந்து விலகிய தமிழகமும், புதுவையும் தேசிய மொத்த நீரோட்டத்தில் கலந்துவிட்டன என்று மத்திய அமைச்சர் சவாண் கூறினார்.

புதுவை ஒதியஞ்சாலையில் நடந்த காங்கிரஸ் பொதுக் கூட்டத்தில் பேசுகையிலேயே அவர் மேற்கண்டவாறு கூறினார்.

கூட்டத்திற்கு மாநில காங்கிரஸ் தலைவர்வெங்கடசுப்பா ரெட்டியார் தலைமை வகித்தார். மாநில காங்கிரஸ் செயலாளர் காரைக்கால் சண்முகம், ஜீவரத்தின உடையார், இளைஞர் காங்கிரஸ் தலைவர் கருணாநிதி. தமிழ்நாடு காங்கிரஸ் கட்சி செயலாளர் டி. என். அனந்த நாயகி ஆகியோர் பேசினார்.

சவாண பேசுகையில் குறிப்பிட்டதாவது: வீடு இல்லாத மக்களுக்கு வீடும், நிலம் இல்லாத மக்களுக்கு நிலம் அளிக்க நீண்ட நாட்களாகத் தவறி விட்டோம். அத்தகைய அடிப்படைப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதுதான் இருபது அம்சத் திட்டத்தின் லட்சியமாகும்.

விடுதலைக்கவி பாரதி ஏழை எளிய மக்களுக்கு, நலிந்தவர்களுக்கு, தாழ்த்தப்பட்ட மக்களுக்குபொருளாதார விடுதலை வேண்டும் என்ற லட்சிய தாகத்தை வெளியிட்டார். அந்த லட்சியதாகத்தை நிறைவேற்ற 1947ம் ஆண்டுக்கு முன்னர் அரசியல் சுதந்திரத்திற்காகப் போராடிய நாம் இன்றைக்குப் பொருளாதார சுதந்திரத்திற்காகப் போராடி வருகிறோம்.

### காலத்தின் கட்டளை

இந்த மண்ணில் எந்த மனிதனும் ஒருவேளை பட்டினியாக இருந்தான் என்ற நிலை ஏற்படக்கூடாது. இது காலத்தின் கட்டளை. அதற்காகவே வளர்ச்சித் திட்டங்களை வகுத்துள்ளோம்.

நாடு நெருக்கடி நிலையை எதிர்நோக்கியிருக்கின்ற இன்றைக்கு நமக்கு நல்ல தலைமை கிடைத்திருக்கிறது. திறமைமிக்க, காலத்தை உணர்ந்த சீரிய தலைமையாக இந்திரா தலைமை கிடைத்திருக்கிறது. எந்தப் பிரச்னையையும் ஆராய்ந்து அறிந்து உறுதியான முடிவெடுக்கும் ஆற்றல் படைத்தவர் நமது பிரதமர். (கைதட்டல்)

பசியைப் போக்குவதுதான் நமது முதல் கடமை எழுத்துரிமை இல்லை, பேச்சுரிமை இல்லை என்பதெல்லாம் அடுத்த பிரச்னைகளாகும். சிறுபான்மை இன மக்களுக்கு, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வாழ்வு அளிப்பதுதான் நமது



முதல் பிரச்னையாகும். பசியைப் போக்க முன்னுரிமை வேண்டாமா?

### பாட்டன் கதை

ஒரு ஏழை இனியும் ஏழையாகவே இருக்க விரும்புகிறேன் என்றாலும் அதனை அனுமதிக்கமாட்டோம். அந்த உரிமையை அவனுக்கு அளிக்கமாட்டோம். (கைதட்டல்)

எங்கள் தாதா ஓகோ என்று வாழ்ந்தார். என் தந்தை ஆஹா என்று வாழ்ந்தார். எனவே நானும் அப்படித் தான் வாழ்வேன் என்று எவராவது பாட்டன் கதை— பழைய கதை பேசினால் இனி அது நடக்காது. (பலத்த கைதட்டல்)

காமராஜர் ஆட்சிக் காலத்தில் தமிழகம் பிற மாநிலங்களுக்கு முன்னோடியாக எல்லாத் துறைகளிலும் முன்னேறியது. தமிழகத்தைப் பார் என்ற குரல் இமயம் வரை ஒலித்தது. அந்த நிலை மீண்டும் தமிழகத்திலும், புதுவையிலும் உருவாக வேண்டும்.

இவ்வாறு சவாண்கூறினார்.

### சண்முகம்

காரைக்கால் சண்முகம் பேசுகையில் இணைப்பிற்குப் பின்னர் புதுவையில் ஏற்பட்டுள்ள எழுச்சியை விவரித்தார். எதிர்காலத்தைப் பிரதமர் இளைஞர்களின் கரங்களில் ஒப்படைத்திருக்கிறார். எனவே இளைஞர்கள் காங்கிரஸ் பணியை மேற்கொள்ள வரவேண்டும் என்று அழைப்பு விடுத்தார்.

## அனைத்திந்திய இளைஞர் பெருமன்றம்

தஞ்சாவூர், ஏப். 22— அனைத்திந்திய இளைஞர் பெருமன்றம் தஞ்சை நகரக் கிளை பேரவைக் கூட்டம் இம்மாதம் 17-ம் தேதி ஏ. ஐ. டி. யு. சி. அலுவலகக் கட்டடத்தில் நடைபெற்றது.

அப்போது புதிய நிர்வாகக் குழுவுக்கு டி. எஸ். எஸ். பாபு தலைவராகவும், ந. வ. மணி உப தலைவராகவும், ஆ. குழந்தைவேலன் செயலாளராகவும், அ. ரவிமாறன் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மன்றத்தின் 6-வது மாநில மாநாட்டை ஒட்டிய பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

## நாளைய நிகழ்ச்சி

இராமலிங்கர் பணி மன்றம்: வார சொற்பொழிவுக் கூட்டம் சொற்பொழிவாளர்: ம.பொ.சி. பொருள்: வள்ளுவர் வழியில் உயிர்க்குலத்தின் ஒருமைப்பாடு. 6. போயஸ் தோட்டம், கோபாலபுரம், மாலை 6-30 மணி.

**தொழில்துறை இயக்குநர் வெங்கடேசன் அறிவிப்பு**

# சிறு தொழில்களை நவீனமாக்க திட்டம்: தமிழக அரசு உதவி

சென்னை, ஏப் 22—தமிழ்நாட்டில் சிறு தொழில்களை நவீனப்படுத்த தமிழக அரசு திட்டமிட்டிருக்கிறது. இதற்கு அரசு உதவி செய்யும் என்று தொழில் வணிக துறை இயக்குநர் கே. வெங்கடேசன் நிருபர்களிடம் அறிவித்தார்.

இதற்காக 10 தொழில்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. மெஷின் டூலஸ், மோட்டார் பாகங்கள், தோல் பொருள், பனியன்கள் போன்ற பல தொழில்கள் இதில் அடங்கியுள்ளன.

தங்கள் தொழில்களை நவீனமயமாக்கி உற்பத்தியை சீரமைக்க வேண்டும் என்று விரும்புபவர்கள் இது சம்பந்தமாக தொழில் வணிகத் துறை இயக்குநரை அணுகலாம்.

தொழில் வணிகத்துறை அதிகாரிகள் சம்பந்தப்பட்ட சிறுதொழில் நிறுவனங்களுக்குச் சென்றுயோசனைகள் கூறுவர்.

விரும்புவோர் முதலில் ரூ. 500 கட்டி தங்கள் பெயர்களை தொழில் வணிகத்துறையிடம் ரிஜிஸ்தர் செய்யவேண்டும்.

தோல்பதனிடும் சிறு நிறுவனங்களுக்கு உதவி செய்வதற்காக பொது வசதி அமைப்பு ஒன்று விரைவில் வாணியம்பாடியில் ஏற்படுத்தப்படும் என்று வெங்கடேசன் தெரிவித்தார்.

இது கூட்டுறவுத் துறையில் அமையும். இதற்கு 40 லட்சம் ரூபாய் செலவாகும் என்றும் அவர் தெரிவித்தார்.

## யோகாசன பயிற்சி முகாம்

சென்னை, ஏப். 22-கோடை யோகாசன பயிற்சி முகாம் ஒன்று சென்னை எக்ஸ்பிரஸ் எஸ்டேட்டில் உள்ள கைவல்ய தாமா யோக சிகிச்சை நிலையத்தில் நடைபெறும்.

இந்த பயிற்சி முகாம் மே 1 லிருந்து 16-ம் தேதி வரை நடக்கும்.

தினசரி காலை 6 மணி முதல் 7 மணி வரையும் மாலை 4-30 மணி முதல் 5-30 மணி வரையும் யோக பயிற்சி நடக்கும், பெண்களும் பயிற்சி வகுப்பில் சேரலாம்.

# உங்கள் குரல்

## நவமணிக்கு பாராட்டு

ஐயா,

தாங்கள் நவமணி நாளிதழின் பொறுப்பேற்று முற்போக்கு கொள்கை வழியில் நடத்துவது கண்டு உள்ளபூர்வமாக மகிழ்ச்சியடைகிறோம் தங்களுடைய உழைப்பும் நாட்டுப் பற்றும் புதிய சிந்தனைகளை வளர்ப்பதற்கு பெரிதும் உதவும் என தங்களை வாழ்த்துகிறோம்.

அண்ணா அறிவாலயம் எனும் காஸ்மாபாலிடன் லைப்ரரிக்கு 'நவமணி' யை வரவழைத்து படித்து மகிழ்கிறோம்.

அண்ணா தி. மு. க.
கோவண்டி கிளை
பம்பாய்-88.

★ ★ ★

## ஓட்டல் முதலாளிகள்

ஐயா,

உணவுப் பண்டங்களின் விலையை குறைத்து விலை நிர்ணயம் செய்தும் அரசு அவசர சட்டம் போட்டும் கூட சட்டத்தை மதிக்காத ஓட்டல் முதலாளிகள் உண்டு. இன்னும் ஏகபோக கொள்ளை லாபம் அடிப்பதை விட்டுவிடவில்லை. அரசு சில உணவுப் பண்டங்களுக்குத் தானே விலை நிர்ணயம் செய்திருக்கிறது.

இட்லிக்குதானே 10 பைசா காஞ்சிபுரம்இட்லி, கல்கத்தா வடை, கட்ட பொம்மன் தோசை இதற்கு விலை நிர்ணயம் கிடையாதே என்று பெரும்பாலான ஓட்டல்களில் பழைய பெயர்களில் புதிய பெயரை சேர்த்து வாய்க்கு வந்த விலையில் விற்கிறார்கள். சட்டத்தை ஏமாற்ற சந்து பொந்துகளில் ஓட்டை இருக்கிறதா என்று குறுக்கு வழியில் கோணல புத்தி முதலாளிகள் ஈடுபட்டு "ஸ்பெஷல்" என்ற பெயரில் பழைய விலையில் விற்கிறார்கள். தாம்பரத்தில் பெரும்பாலான ஓட்டல்களில் 15 பைசா இட்லி, 30 பைசா தோசை, 20 பைசா மெது வடை, 35 பைசா பொங்கல் கிடையாது. சில ஓட்டல்களில் ஸ்பெஷல் உணவுக்கு போகும் வழி ஜனதா உணவுக்குப் போகும் வழி என்று சட்டத்தை கேலி செய்யும் ஓட்டல் கோமாளிகளும் உண்டு. இட்லி அண்டாவுக்கு ஓய்வு கொடுத்து விட்டு இட்லி கேட்டால்இப்பத்தான் தீர்ந்தது என்று கூறுகிறார்கள். என்ன சார் எப்ப பார்த்தாலும் இல்லை என்ற பல்லவி பாடுகிறீர்களே உங்க ஓட்டலில் எப்பதான் இட்லி கிடைக்கும் என்றால் நாங்கள் இருக்கிறது என்று சொல்லும்போது நீங்கள் வந்து சாப்பிடலாம் என்று வாய் கூசாமல் சொல்கிறார்கள்.

இந்த ஓட்டல் முதலாளிகள் போக்கைப் பார்த்தால் எங்களால் எப்படியும் லாபத்தை அதிகரிக்க முடியுமே தவிர லாபத்தை குறைக்க முடியாது என்ற போக்கில் நடந்து கொள்கிறார்கள்.

ஜெயப்பிரகாஷ்,
தாம்பரம்

★ ★ ★

## இளநிலை ஆசிரியர் வேலை வாய்ப்பு

ஐயா!

படித்து இரண்டாண்டுகள் ஆசிரியர் பயிற்சி பெற்றவர்களைவிட, பல ஆண்டுகள் வேலையில்லாமல் முப்பத்தைந்து நாற்பது வயதைக் கடந்த என்போன்ற இளநிலை ஆசிரியர்கள் ஏராளமாக உள்ளனர்,

அரசுப் பள்ளி, நகராட்சிப் பள்ளி, ஊராட்சி ஒன்றியப் பள்ளி ஆகியவைகளில் இவர்களைத் தேர்ந்தெடுக்க வாய்ப்பில்லை. தனியார் பள்ளிகளில் மட்டுமே இவர்களுக்கு வாய்ப்புண்டு.

ஆனால் தனியார் பள்ளிகளோ, வேலைவாய்ப்பு அலுவலகத்தின் மூலம்தான் காலி இடத்தை நிரப்ப வேண்டும் என்ற விதியை முழுமையாகச் செயல்படுத்துவதில்லை. இதனால் இப்படிப்பட்ட பரிதாபகரமான ஆசிரியர்களின் எதிர்கால நிலை வெகுவாகப்பாதிக்கிறது.

ஏற்கனவே அரசு 50 வயதைக் கடந்தவர்களுக்கும், 25 ஆண்டுகள் பணி செய்துள்ளவர்களுக்கும் கட்டாய ஓய்வு கொடுத்து வருகிறது. இது வரவேற்கத்தக்கதே.

ஏனைய ஆண்டுகளை விட 1975—76 கல்வி ஆண்டில் ஆசிரியர் வேலை வாய்ப்பை கடினப் படுத்தியதாலும் அரசின் கணக்குப்படி ஏற்கனவே பயிற்சிபெற்ற 18 ஆயிரம் ஆசிரியர்கள் இருப்பதாலும், ஆசிரியர்கள் பயிற்சி பெற்றஆண்டினை சீனியாரிட்டியாக வைத்து வேலைவாய்ப்பு அலுவலகத்தின் மூலம் வேலை கொடுக்க அரசு ஆவனசெய்ய வேண்டும்.

இந்தக் கல்வி ஆண்டிலாவது புதிய ஆட்சி நீண்டநாள் வேலையில்லாமல் இருக்கும் ஆசிரியர்களுக்கு வேலை கிடைக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

எஸ். வஜ்ஜிரம்,
வியாசர்பாடி,
சென்னை-39

# குருவியை விரட்ட முயன்றவர் சாவு

விழுப்புரம், ஏப். 22— குருவியை விரட்ட முயன்ற வாலிபர் ஒருவர் பரிதாபமாக மரணமடைந்தார். அவரது பெயர் ரங்கநாதன் வயது 25.

வடலூருக்கு அருகில் உள்ள பொளகுடி கிராமத்தில் இந்த சம்பவம் நடந்தது.

இது குறித்து விவரமாவது:

ரங்கநாதனின் வயலில் குருவிகள் நெல்லை கொறித்து பாழ்படுத்திக் கொண்டிருந்தன. அதனால் குருவிகளை விரட்ட வாணம் விடுவதற்கு வெடி மருந்து எடுத்துச் சென்றார் ரெங்கநாதன் ஓட்டத்தில் சிறு வெடி மருந்து எரித்து நன்றாக வெடிக்கிறதா என்று சோதனை பார்க்க கல்லில் வைத்து தட்டிப் பார்த்தார்.

அப்போது திடீரென்று கிளம்பிய தீப்பொறி பக்கத்தில் இருந்த வெடி மருந்து பொட்டலத்தின்மீது பட்டு எரிந்தது.

அதனால் அருகிலிருந்த ரங்கநாதன் உடலில் பலத்த தீக் காயங்கள் ஏற்பட்டன. கடலூர் மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட அவர் பரிதாபமாக மரணமடைந்தார்.

# சிவாஜி கணேசனுக்கு மூப்பனர் இட்டுள்ள அன்புக் கட்டளை

சென்னை, ஏப். 22— சிவாஜி கணேசனுக்கு காங்கிரஸ் தலைவர் கருப்பையா மூப்பனர் ஒரு கட்டளையை இட்டுள்ளார். அந்தக் கட்டளை விவரத்தை சிவாஜி கணேசனே வெளியிட்டார்.



பிரதமர் இந்திராவின் 20 அம்ச பொருளாதார திட்டத்தை மக்களிடம் பரப்பும்படி மூப்பனர் தனக்குக் கட்டளையிட்டு இருப்பதாகத் தெரிவித்தார்.

நேற்று இரவு ராஜாஜி மண்டபத்தில் நடந்த "இந்திரா காந்தியின் தலைமையில் 2-வது புரட்சி" என்ற நூல் வெளியீட்டு விழாவில் சிவாஜி கணேசன் இது பற்றி தெரிவித்தார்.

சிவாஜி கணேசன் பேசியதாவது:—

இந்தப் புத்தகத்தை எழுதிய பெருமாள் உடையார் சுதந்திரப் போராட்டத்தில் பல ஆண்டுகள் சிறை இருந்தவர். நீதி மன்றத்திலேயே சவுக்கடி பட்டவர். இதை தான் கேள்விப் பட்டபோது என் உடல் புளகாங்கிதம் அடைந்தது.

அவர் எழுதிய இந்தப் புத்தகத்தை முதலில் பெறும் பாக்கியம் இந்த எளியோனுக்குக் கிடைத்தது மறக்க முடியாத சம்பவம் ஆகும்.

## கூட்டம் வருகிறது

தியாகிகள் விழாவுக்கும் கூட்டம் வருகிறது. பரவாயில்லை. நாம் உருப்பட்டு விடுவோம். அந்த அளவுக்கு தேச பக்தி வளர்ந்துள்ளது.

நாங்கள் இளைய தலைமுறையைச் சேர்ந்தவர்கள். 50 வயதைத் தாண்டியவர்கள். தமிழ்நாட்டில் கலை உலகில் 50 வயதைத்தாண்டினலே அதிக மதிப்பு இருக்கும். நான் தாத்தாவாக ஆனுலும் இளைஞர்களுக்காக கடமை ஆற்றுவேன்.

காங்கிரஸ் தலைவர் எனக்குக் கட்டளை இட்டுள்ளார். 20 அம்சத் திட்டத்தை மக்களிடம் பரப்பும்படி எனக்குக் கட்டளையிட்டுள்ளார்.

## காமராஜ் ஆன்மா

20 அம்ச திட்டம் என்பது காமராஜர்கண்ட கனவுதான் இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவது எங்கள் அருமைத் தலைவனுக்கு அஞ்சலி செலுத்துவதாகும் இது வெற்றி பெற்ருல் அவருடைய ஆன்மா சாந்தியடையும்.

காமராஜர் ஒரு திட்டத்தைத் தந்தால் அதனை எப்படி சிரமேற்கொண்டு செயல்படுவேனே அது போல இந்த 20 அம்சத் திட்டத்தை நிச்சயமாக செயல்படுத்துவேன்.

சத்தியமா செயல்படுத்துவேன், காமராஜர் மீது ஆணையாக இதைச் சொல்கிறேன்.

பெரியவர் பக்தவத்சலத்திற்கு தியாகிகளைப் பற்றித் தெரியும். என்னைப் போன்றவர்கட்கு தியாகத்தைப் பற்றித் தெரியாது, என்தகப்பனர்தியாகி. கஷடப்பட்டார்.

இளைய தலைமுறைக்கு தியாகிகள் என்ருல் என்ன என்று தெரியாது. இதற்கு இளைஞர்கள் காரணம் அல்ல. பெரியவர்கள்தான்காரணம்.

## கடவுள் ஒழிப்பா?

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம். ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்று இருக்கிறது.

இதில் உள்ள ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்பதை எடுத்தார்களே? எப்படி பொறுத்திருந்தீர்கள்? இளைஞர்களின் மவுனம் காரணமா? அல்லது மக்குத் தனமா?

பெரியவர்கள், தியாகிகள் ஒதுங்கியிருக்கக் கூடாது. நெருக்கடி காலம் வந்தால் பழைய ராணுவ வீரர்கள் எப்படி திரும்ப அழைக்கப்படுவார்களோ, அதுபோல நாடு நெருக்கடிநிலைக்குவரும்போது தியாகிகள் செயல்பட முன்வரவேண்டும். அறிவுரை கூறவேண்டும்.

இளையவர்கள் சார்பில் முதியவர்களை க்கூப்பி வரவேற்கிறேன்.

## துப்பாக்கி முனை

ஏழைக்கு உணவு கிடைக்கவில்லை யென்ருல் துப்பாக்கி முனையில் உணவை எடுப்பார்கள் என்று சொல்கிருர்கள். தனி ஒருவனுக்கு உணவில்லையென்ருல இந்த ஜெகத்தை அழித்திடுவோம் என்று பாரதி பாடி இருக்கிருர்.

தனவந்தர்கள் இறங்கி வர வேண்டும். பாவப்பட்டவர்கள் உட்பட அனைவரும் சமமாக வாழ வழி செய்ய வேண்டும்.

பாவப்பட்டவர்கள் ஏழைகள். தன் கையால் எடுத்துக் கொள்வார்கள் என்று நினைக்கக் கூடாது.

## கடைசி சான்ஸ்

20 அம்ச திட்டம்தான் நமக்குக் கிடைத்துள்ள கடைசி சான்ஸ். இந்த சான்ஸை நாம் தவறவிடக் கூடாது.

காமராஜ் நினைத்த அருமையான திட்டத்தை இந்திரா அமல்படுத்துகிருர். இது நம் திட்டம் என்று நினைத்து நாம் செயல்படவேண்டும்.

20 அம்சத் திட்டம் ஒவ்வொரு இந்தியக் குடிமகனின் திட்டம். தமிழர்களின் திட்டம் என்ருர் சிவாஜிகணேசன்.

சுதந்திரப் போராட்டத் தியாகி பெருமாள் உடையார் எழுதிய இந்த நூல் வெளியீட்டு விழாவுக்கு முன்னுள் முதல்வர் பக்தவத்சலம் தலைமை வகித்தார்.

காங்கிரஸ் தலைவர் மூப்பனர் இந்தப் புத்தகத்தை வெளியிட முதல் பிரதியை சிவாஜி கணேசன் பெற்றுக் கொண்டார்.

கே. ராஜாராம் நாயுடு, ஷெரீப் ராமகிருஷ்ணன், எஸ். டி. சுந்தரம், டாக்டர் எஸ். விஜயலட்சுமி, டாக்டர் சவுரிராஜன், ஓய்வு பெற்ற நீதிபதி என். கிருஷ்ணசாமி ரெட்டியார் ஆகியோரும் இந்த விழாவில் பேசினர்கள்.

## பக்தவத்சலம்

இந்திரா காந்தியின் முதல் புரட்சித் திட்டம் அவசர நிலைப் பிரகடனம் ஆகும். இரண்டாவது புரட்சித் திட்டம் 20 அம்ச திட்டம் ஆகும். இந்த திட்டத்தை அமலாக்க அனைவரும் ஒன்றுபட்டு செயல்படவேண்டும் எனறுர் பக்தவத்சலம்.

பக்தவத்சலத்திற்கு முன்னுள் நீதிபதி என். கே. ரெட்டி பொன்னுடைபோர்த்திஞர்.

பெருமாள் உடையாருக்கு சிவாஜிகணேசன் கதர் சால்வை போர்த்தினுர்.

# இலங்கை அகதிகள்: ஏ.ஐ.டி.யு.சி. கோரிக்கை

தஞ்சாவூர், ஏப். 22—தமிழகம் வந்துள்ள இலங்கை அகதிகளுக்கு உடனடி நிவாரணம் அளிக்கப்படவேண்டும் என்று அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸ் கோரிக்கை விடுத்திருக்கிறது.

அண்மையில் தமிழகம் வந்துள்ள இலங்கை அகதிகளில் சுமார் 60 குடும்பங்கள் தஞ்சாவூர் மணல் மேடு கூட்டுறவு நூற்பாலைக்கு அனுப்பப்பட்டிருக்கிருர்கள்.

இவர்களுக்கு இது வரை இருக்க இடமோ, வேலை உத்தரவாதமோ கொடுக்கப்படவில்லை. கையில் பணம் இல்லாமலும் பாதுகாப்பற்ற நிலையில் இருந்துவருகிருர்கள்.

இவர்களுக்கு உடனடி நிவாரணம அளிக்க வேண்டும் என்று ஏ. ஐ. டி. யு. சி. தஞ்சை மாவட்டச் செயலாளர் மன்னை மு. அம்பிகாபதி தஞ்சை மாவட்ட கலெக்டருக்கு விடுத்துள்ள மனுவில் கோரியிருக்கிருர்.

# நேருஜி தேசிய காங்கிரஸ்

சென்னை, ஏப். 22—மூர் அங்காடியில் இருந்த தேசிய விழா குழு என்ற சங்கத்தின் பெயர் நேருஜி தேசிய காங்கிரஸ் என்று மாற்றப்பட்டிருக்கிறது.

கீழ்க்கண்டவர்கள் இதற்கு நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவர்: என். கே. தர்மலிங்கம், உபதலைவர்கள்: எம் வேணுகோபால், ஜி. ஆறுமுகம், செயலாளர்: எஸ், பார்த்தசாரதி, உதவி செயலாளர்கள்: சி. பஞ்சாட்சரம் என். செல்லப்பன், பொருளாளர்: எஸ், ஜி. மாசிலாமணி, அமைப்பாளர் மகமத் ஜப்ருல்லாகான்.

# கடை நிலை ஊழியர் சங்கம்

சென்னை ஏப். 22—தமிழக அரசு கடைநிலை ஊழியர் சங்கத்துக்கு அடுத்த 2 ஆண்டுகளுக்குக் கீழ்க் கண்டவர்கள் நிாவாகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவர்: சி. நடேசன், துணைத் தலைவர் ஆர். கிருஷ்ணன், கே. மாரியப்பன் செயலாளர்: எம். மாணிக்கம் துணைச் செயலாளாகள், அரங்கநாதன், இராமாஞ்சி, அமைப்பு செயலாளர்: ஆர். ஏழுமலை, பொது நலநிதிச் செயலாளர்: ஜி, பன்னீர், பொருளாளர்: டி. சாரங்கபாணி, தணிக்கையாளர்: ஆர். பாலசுந்தரம்.

### விவசாயிகள் மாநாடு புகார்

# ஏழை விவசாயிக்கு கடன்தர விவசாய பாங்க் மறுப்பு

நாகர்கோயில், ஏப். 22—ஏழை விவசாயிகளுக்கு கடன்தர விவசாய பாங்குகள் மறுத்து வருவதாக விவசாயிகள் மாநாட்டில் புகார் தெரிவிக்கப்பட்டது.

தமிழ்நாடு விவசாய தொழிலாளர் சங்க குமரிமாவட்ட சிறப்பு மாநாடு இந்த மாதம் 19-ந் தேதி நாகர் கோயிலில் நடைபெற்றது.

கொடிகால் செல்லப்பா தலைமை வகித்தார்.

எஸ். குழந்தைசாமி வரவேற்ருர்.

ஆரம்பத்தில் விவசாய சங்க இயக்கத்தில் உயிரிழந்த தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது.

கம்யூனிஸ்டு கட்சியின் மத்திய செயற்குழு உறுப்பினா எஸ். குமரன் எம். பி., மாநாட்டை துவக்கிவைத்துப் பேசினர்.

தமிழ் மாநில விவசாய தொழிலாளர் சங்க பொதுச் செயலாளர் ஆர். நல்லக்கண்ணு நெல்லை மாவட்டச் செயலாளர் வி. எஸ். காந்தி ஏ. ஐ. டி. யு. சி. தலைவர் கே.எல். எஸ் சந்தானம் ஆகியோர் மாநாட்டில் பேசினர்.

நிர்வாகிகள் தேர்தலில் கொடிகால் செல்லப்பா மீண்டும் மாவட்ட தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

துணைத்தலைவர்களாக எஸ். வைகுண்டம், செல்லப்பன், செயலாளராக கோபால கிருஷ்ணன், துணைச்செயலாளர்களாக எஸ். எஸ். குட்டி, தாணு, மா. மலையன், பொருளாளராக எஸ். குழந்தைசாமி ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பிறகு 5 தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

20 அம்ச திட்டத்தை வரவேற்றும், விவசாய தொழிலாளர் க்ஷேமநலம்பற்றிய திட்டத்தை நடைமுறைக்குக் கொண்டுவர நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மற்ருெரு தீர்மானத்தில் ஏழை விவசாயிகளுக்கு விவசாயிகள் பாங்குகள் கடன் கொடுத்து வந்ததை இப்போது நிறுத்திவிட்டதாகக் குறிப்பிடப்பட்டது.

இதனுல் ஏழைவிவசாயிகள் பாதிக்கப் பட்டுள்ளதாகவும். சம்பந்தப்பட்ட இலாகாவினர் உடனே நடவடிக்கை எடுத்து முன்பு வழங்கியது போல் கடன் வழங்க ஏற்பாடு செய்யவேண்டும் என்றும் தீர்மானத்தில் கோரப்பட்டுள்ளது.

### பொருளாதார சீரமைப்பில் தீவிரம்

# தமிழகம் வருகிருர் சி.எஸ்.

## மின்சார வாரிய நிலை குறித்து கவலை

புதுடெல்லி, ஏப். 22— தமிழ்நாட்டின் பொருளாதார நிலையை சீரமைக்க மத்திய நிதியமைச்சர் சி. சுப்பிரமணியம் தீவிர நடவடிக்கை எடுத்து வருகிருர். இதற்காக அவர் தமிழகம் வருகிருர்.



மின்சாரவாரியத்தின் நிதி நிலைமைக் குறித்தும், குறிப்பாக மிக அதிக அளவிலிருந்து வரும் லைன் லாஸ் குறித்தும் சி. சுப்பிரமணியம் மிக கவலை அடைந்திருக்கிருர்.

மே மாதம் முதல் இரண்டு வாரங்களில் தமிழக உயர் அதிகாரிகளுடன டெல்லியில் பேச்சு நடத்த சுப்பிரமணியம் திட்டமிட்டிருக்கிருர்.

அப்போது தமிழ்நாட்டின் பொருளாதார நிலை குறித்து முழு ஆய்வு நடத்தப்படும்.

விவாதத்தைத் தொடர்ந்து தொடர் நடவடிக்கைக்காக சி. எஸ். தமிழகத்திற்கு நேரடியாக வருவதற்கும் திட்டமிட்டிருக்கிருர்.

தமிழ்நாடு மின்சார வாரிய நிதி நிலைமை குறித்து சுப்பிரமணியம் மிகவும் கவலை அடைந்திருக்கிருர்.

குறிப்பாக தமிழகத்தில் லைன் லாஸ் (மின்சாரத்தை எடுத்துச் செல்லும்போது ஏற்படும் இழப்பு) மிகவும் அதிகமாக இருக்கிறது.

28 சதவிகிதம் தமிழகத்தில் லைன்லாஸ் ஏற்படுகிறதாம். நாட்டிலேயே இதுதான் அதிகமாம் இதைக் குறைத்து சீரமைப்பது குறித்து முக்கியக் கவனம் செலுத்துவார்.

தூத்துக்குடி அனல் மின்நிலையத்துக்கு முன் தொகையாக மத்திய அரசு ரூ. 27 கோடி ஒதுக்கியிருக்கிறது. 420 மெகாவாட் மின்சாரம் அங்கு உற்பத்திசெய்ய திட்டமிடப்பட்டிருக்கிறது. இதை விரைவில் அமுல்படுத்துவது பற்றி சுப்பிரமணியம் முக்கிய கவனம் செலுத்துவார்.

பாட்டியாறு — புன்னம் புழா நீர் மின்திட்டத்தில் 100மெகாவாட் மின்சாரம் உற்பத்தி செய்வது குறித்தும் விவாதம் நடத்துவார்.

தமிழ் நாட்டில் நிலச்சீர் திருத்தம் அமுல் குறித்தும் சி. எஸ். விவாதிப்பார்.

வறட்சிப் பகுதிகளில் நிரந்தரமான நிவாரணம் செய்வதற்கான திட்டங்கள் குறித்தும் நிதி அமைச்சர் கவனம் செலுத்துவார்.

சேலம் இரும்பு ஆலைத் திட்டத்துக்காக 1976—77-ம் ஆண்டுக்கு ரூ. 3 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது.

மத்திய உருக்குத் துறை அமைச்சர் சந்திரஜித் ஜாதவ் இது சம்பந்தமாக தனிக்கவனம் செலுத்தி வருகிருர்.

சேலம் உருக்காலை நிர்வாகம் ரூ. 16 கோடி வேண்டும் என்று கேட்டிருக்கிறது.

இத் திட்டத்தை மேலும் தாமதப்படுத்தக் கூடாது என்று உருக்குத் துறை கருதுகிறது. ஆனல் திட்டக்குழு இதற்கு இன்னமும் முழு ஒப்புதல் அளிக்கவில்லை, எப்படியும் சேலம் திட்ட ஒதுக்கீடு உயரலாம் என்று கருதப்படுகிறது.

# எடை குறைவு: ரூ. 200 அபராதம்

பொன்னேரி, ஏப். 22— எடை குறைவான அளவுகளை வைத்து இருந்த ஆதித்தன் ஸ்டோர்ஸ் என்ற கடைகாரர் ஒருவருக்கு 200 ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது.

பொன்னேரி உதவி லேபர் இன்ஸ்பெக்டர் அந்த கடையில் சோதனை செய்து எடைக் குறைவான அளவுகளை அந்த உரிமையாளர் வைத்திருந்ததை கண்டு பிடித்து வழக்கு தொடர்ந்தார்.

வழக்கை விசாரித்த திருவள்ளூர் ஜுடிசியல் மாஜிஸ்திரேட், கடைக்காரர் கே. தங்கராஜிக்கு 200 ரூபாய் அபராதம் விதித்து தீர்ப்பு கூறினுர்.

# சென்னை மாநகராட்சி கமிஷனருக்கு பாராட்டு

சென்னை, ஏப். 21— சென்னை மாநகராட்சி ஆணையாளராக பணியாற்றி சேலம் மாவட்டம் கலெக்டராக மாற்றலாகிப் போகும் வி. கருப்பனுக்கு செய்தி நிருபர்கள் தேநீர் விருந்தளித்தனர்.

மாநகராட்சி தனி அதிகாரி டி. வி. அந்தோணி தலைமை வகித்தார். கருப்பனின் திறமை மிக்க நிர்வாகம் குறித்து நிருபர்கள் சௌரி, சர்மா, வின்சென்ட், பாலு ஆகியோர் பாராட்டிப் பேசினர்.

கருப்பன் பாராட்டுக்கு நன்றி தெரிவித்துப் பேசுகையில் நிருபர்களின் ஒத்துழைப்புக்கு மகிழ்ச்சி தெரிவித்தார்.

யு. எஸ். நடராஜன் புதிய மாநகராட்சி கமிஷனராக பதவி ஏற்கிருர்.

மாநகராட்சி மின்சாரப் பிரிவில் மோசடி மஸ்டர் ரோல் தயாரித்து ரூபாய் 1 கோடி 26 லட்சம் கையாடல் செய்ததை கண்டு பிடித்தவர் கருப்பன் என்பது குறிப்பிடத்தக்கது.

### குடிதண்ணீர் பஞ்சம்

# கவர்னருக்கு கம்யூனிஸ்டு எம்.பி. அவசர தந்தி

சென்னை, ஏப் 22—திருநெல்வேலி மாவட்டத்தில் ஏற்பட்டிருக்கும் கடுமையான குடிதண்ணீர் பஞ்சத்தைப் போக்க அரசு உடனடியாக போர்க்கால நடவடிக்கை போன்று நிவாரண வேலைகளில் ஈடுபட வேண்டும் என்று கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் எஸ். குமரன் தமிழக கவர்னருக்கு அவசரத் தந்தி ஒன்றை அனுப்பியிருக்கிருர்.

கடந்த வாரத்தில் குமரன் திருநெல்வேலி மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்தார், அப்போது குடிதண்ணீர் கிடைக்காமல் மக்கள் தவிப்பதை அவர் நேரில் கண்டார். அதை ஒட்டி கவர்னருக்கு குமரன் அவசரத்தந்தி அனுப்பியிருக்கிருர்.

மேற்கண்ட தந்தியின் நகலை தமிழ் மாநில செயலாளர் எம். கல்யாணசுந்தரத்துக்கும் அனுப்பி யிருக்கிருர்.

# போரூர் காங்கிரஸ் ஊழியர் கூட்டம்

சென்னை, ஏப். 22— சைதாப்பேட்டை வட்டத்தைச் சேர்ந்த போரூர் காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டம் தியாகி பி. கே. ராமமூர்த்தி தலைமையில் நடந்தது.

குன்றத்தூர் டி. ஆர். துரை, ஜார்ஜ் கோமகன், வில்லியம்ஸ், பொ. ராமலிங்கம் ஆகியோர் பேசினர். பி. அரி கோபால் நன்றி கூறினுர்.

# காலத்தை எதிர்த்து காலனுக்கு பலியான இளைய ராஜா

குட்டி மன்னர்களின் களியாட்டங்களமாக ராஜஸ்தான் இருந்தகாலம் ஒன்றுண்டு ஆனால் இன்றோ?

சட்டத்தின் நீளக் கைகள் அவர்களின் குரல் வளையை இறுக்கிப் பிடிக்கின்றன. உடமை வர்க்கத்தின் கழுத்தில் சுருக்குக் கயிறு மெல்ல மெல்ல இறுகுகின்றது.

காலக்காற்றின் போக்கை உணர்ந்து சாமர்த்தியமாக தப்பித்துக் கொள்கின்றனர். சிலர் அதாவது தலை தப்பினால் போதுமென்று எல்லாவற்றையும் உதறிவிட்டு ஓட்டம் பிடிக்கின்றனர் சிலர்?

எதிர் நீச்சலடித்து பரிதாபமாக தோல்வி அடைகின்றனர்

சமீபத்தில் ராஜஸ்தானில் அப்படியொரு சம்பவம்? அந்த மாநிலத்தின் முதல்வர் ஹரிதியோ ஜோஷி அவருக்கு நமது மாஜி முதல்வர் கருணாநிதியின் சாமர்த்தியத்தில் கடுகளவு கூட கிடையாது.

நிலச் சீர்திருத்தம் கொண்டு வந்தார். உண்மையிலேயே அதை அமுலாக்க உறுதி பூண்டார்.

நம்மவர் (கருணாநிதி) போல தென்னந் தோப்பு. பழத் தோட்டம் ஆகியவைகளுக்கு விதிவிலக்கு அளித்து தியாகராஜன்களை வாழவைக்க அவருக்கு 'வக்கு' இல்லை நிலப் பிரபுத்துவத்திற்கு சப்லாக்கட்டை தட்டியவர் கருணாநிதி.

## மாஜி மன்னர்

ஆனால் கொடிகட்டிப் பறந்த மாஜி மன்னர்களையும் ராஜஸ்தான் முதல்வர் விடவில்லை.

நில உச்சவரம்பு சட்டத்தை மீறி நிலம் வைத்திருந்த மாஜி மன்னர்களின் நிலத்திலும் அவர் கையை வைத்தார். பலன்? ராஜஸ்தான் மாநில ஆள்வார் சமஸ்தான மாஜி மன்னரின், மகன் மகராஜ் குமார் தற்கொலை செய்து கொண்டார்.

விறுவிறுப்பான நாடகத்தின் உச்சகட்ட (Climax) காட்சி போல இந்த தற்கொலை சம்பவம் அமைந்துவிட்டது.

ராஜஸ்தானில் நிலச்சீர்திருத்தம் எவ்வளவு வன்மையாக—உறுதியாக—அமுலாக்கப்படுகிறது என்பதற்கு இது ஒரு சான்று.

மகராஜ் குமாரின் தற்கொலை உச்சகட்ட காட்சி என்றால் அந்த நிலைக்கு அழைத்துச் சென்ற ஆரம்ப காட்சிகளை பார்ப்போம்.

## அரசுக்கு சவால்

1973ம் ஆண்டே நிலச் சீர்திருத்த சட்டத்தை எதிர்த்து மாநில அரசுக்கு மகராஜ் குமார் சவால் விடுத்தார்.

1975ம் ஆண்டு இறுதியில் அவரிடமிருந்த உபரி நிலங்களை கைப்பற்ற ராஜஸ்தான் அரசு நடவடிக்கை எடுத்தது. மகராஜ்குமார் என்று அழைக்கப்படும் பிரதாப் சிங் வரளாயிருப்பாரா?

ஆயுதந்தாங்கிய குண்டர்கள் உதவியோடு அரசின் முயற்சியை அவர் முறியடிக்க முனைந்தார்.

1973-ம் ஆண்டு டிசம்பர் திங்கள் 24-ந்தேதி ஆள்வார் சமஸ்தான அரண்மனையில் மகராஜ்குமாரின் குண்டர்கள் ஆயுதங்களோடு நுழைந்தனர்.

பளிங்குக் கற்கள் பதிக்கப்பட்ட மேல்மாடி இடிக்கப்பட்டது. பளிங்கு கற்களை அள்ளிக் கொண்டு குண்டர்கள் ஓடிவிட்டனர்.

அரசு என்ன செய்தது? ஆள்வார் சமஸ்தான கலெக்டர் இது சம்பந்தமாக வழக்கு ஒன்றை பதிவு செய்தார்.

## அரண்மனை முற்றுகை

1974-ம் ஆண்டு பிப்ரவரி 14 ந் தேதி. ஆயுதந் தாங்கிய 200 பேர் கொண்ட குண்டர் படை அரண்மனையை 'முற்றுகை' யிட்டது.

அது மட்டுமா! யானைகள் மீதேறி ராஜபுதனத்து மாஜி மன்னரின் குண்டர் படை வந்தது. இந்த 'முற்றுகைக்கு மோட்டார் வண்டிகளும் பயன் படுத்தப்பட்டனவாம். வெற்றிகரமாக அரண்மனையை மகராஜ் குமார் கைப்பற்றினர். அரசு செய்தது என்ன! இது சம்பந்தமாக வழக்கு ஒன்றை பதிவு செய்தது.

அன்று இரவு அரண்மனையின் உச்சியிலே மகராஜ் குமாரின் தனிக்கொடி ஏற்றப்பட்டது. இந்திய அரசுக்கு—மக்களாட்சிக்கு அவர் விடுத்த மாபெரும் சவால் இது.

அரசு என்ன செய்தது? மற்றொரு வழக்கு ஒன்றை பதிவு செய்தது.

## அனுவசிய மோதல்

ஜனநாயகத்திற்கு விடப்பட்ட சவாலை ராஜஸ்தான் அரசு சகித்துக் கொண்டது. ஏன்?

மாநில முதல்வர் ஜோஷியே பதில் கூறுகிறார்.

"மாஜி மன்னர் மகனோடு அனுவசிய மோதலை தவிர்க்கவே அரசு அமைதிகாத்தது' என்று ராஜஸ்தான் சட்ட சபையில் அவர் கூறினார்.

**பு. பத்மநாபன்**

நாடகத்தின் காட்சி தொடருகிறது.

1976ம் ஆண்டு ஜனவரி 5ந் தேதி, விஜய் விலாஸ் தோட்டத்தில் மகராஜ் குமாரின் அடியாட்கள் துப்பாக்கி சகிதங்களோடு புகுந்தனர்.

அந்த தோட்டம் 1975-ம் ஆண்டு உச்சவரம்பு சட்டத்தின் கீழ் மாநில அரசால் கையகப்படுத்தப்பட்டது.

அந்த தோட்டத்தில் இருந்த வருவாய்த்துறை அதிகாரிகள் மாஜி மன்னரின் குண்டர்களால் மிரட்டப்பட்டனர்.

அரசு செய்தது என்ன? வழக்கம் போல் மகராஜ் குமார் மீதும் அவரது ஆட்கள் மீதும் வழக்கு பதிவு செய்யப்பட்டது.

## மிரட்டல்

அதே மாதம் 28-ந் தேதி விஜய் சாகர் கால்வாயை பழுது பார்த்துக்கொண்டிருந்த நீர்ப்பாசன துறையை சேர்ந்த ஊழியர்கள் மகராஜ் குமாரின் அடியாட்களால் மிரட்டப்பட்டனர்.

இது சம்பந்தமாக வழக்கு ஒன்றையும் அரசு பதிவசெய்தது. மகராஜ்குமாருக்குத்தான் எவ்வளவு சலுகைகள். சாதாரண குடிமகன் இவ்வாறு செய்ய முடியுமா?

## தடுப்புச் சுவர்

அரசு கையகப்படுத்திய விஜய் விலாஸ் தோட்டத்திற்கும் மகராஜ்குமாரின் வீட்டிற்கும் இடையே தடுப்புச் சுவர் ஒன்றை அரசு எழுப்பியது.

இதை எதிர்த்து மகராஜ் குமாரின் தந்தையான மாஜி மன்னர் கோர்ட்டில் ரிட்மனுவொன்றை தாக்கல் செய்செய்தார்.

அதே நிலை நீடிக்கவேண்டும் என்று இடைக்காலத் தடையொன்றை கோர்ட் விதித்தது.

ஆனால் மகராஜ் குமார் சும்மா இருக்கவில்லை துள்ளி எழுந்தார். ஏவினார் ஆட்களை. சுவர் இடித்துத் தளளப்பட்டது.

அந்த இடத்தில் சுவரே இல்லாததுபோல ஒரு நிலையைச் சிருஷ்டிக்கவே இவ்வாறு அந்த சுவர் இடித்துத் தள்ளப்பட்டதாம்.

அரசு என்ன செய்தது? வழக்கு ஒன்றைப் பதிவு செய்தது.

## போலீசாருக்கு சிறை

மார்ச் மாதம் 12-ந் தேதி விஜய் விலாஸ் தோட்டத்தில் தலைமை போலீஸ்காரர் ஒருவர் தலைமையில் ஆயுதந் தாங்கிய 4 போலீஸ்காரர்கள் காவலுக்குப் போடப்பட்டனர்.

ஒருநாள் இரவு. மகராஜ் குமார் அவரது மனைவி மற்றும் 60பேர்கள் அந்த தோட்டத்தில் புகுந்தனர்.

காவலுக்கு நின்ற போலீஸ்காரர்கள் அடித்து நொறுக்கப்பட்டனர்.

அது மட்டுமல்ல! அந்த போலீஸ்காரர்களை மகராஜ குமார் கைது செய்தார். மகராஜாவின் அரண்மனையில் போலீஸ்காரர்கள் சிறை வைக்கப்பட்டனர்.

அரசு என்ன செய்தது. அரசுக்கு விடப்பட்ட சவால்களை இதுவரை பொறுத்து வந்த ராஜஸ்தான் முதலவர் இனியும் தாமதித்தால் ஆபத்து என்பதை உணர்ந்தார்.

பிரதாப் சிங்கையும் அவரது ஆட்களையும் கைதுசெய்ய உத்தரவிட்டார்.

## காலை வைக்காதே

டெபுடி இன்ஸ்பெக்டர் ஜெனரல் தலைமையில் ஆள்வார் சமஸ்தானத்திற்கு போலீஸ் படை அனுப்பப்பட்டது.

போலீஸ்படை வருவதை அறிந்த பிரதாப் சிங் அரண்மனையில் இருந்துகொண்டு மிரட்ட ஆரம்பித்தார்.

"அரண்மனைக்குள் யாராவது, காலை வைத்தால் சுடுவேன்" என்றுபோலீசாரை அவர் அச்சுறுத்தினார்.

இந்த நெருக்கடியை சமாளிக்க பிரதாப் சிங்கின் தந்தையான ஆள்வார் சமஸ்தான மாஜி மன்னர் அரண்மனைக்கு அனுப்பி வைக்கப்பட்டார்.

பிரதாப் சிங்கை சரணடையுமாறு அவரது தந்தை கோரினார். மகராஜகுமார் கேட்கவில்லை.

இதைத் தொடர்ந்து ஆள்வார் சமஸ்தானத்து மாஜி மன்னர் முதல்வர் ஜோஷியை சந்தித்தார்.

தமது மகன் ஜெய்ப்பூரில் சரணடைய அனுமதிக்குமாறு முதல்வரை அவா கேட்டுக் கொண்டார்.

## பேச்சுவார்த்தை

இதையடுத்து மகராஜ் குமாரோடு அவரது தந்தை பேச்சுவார்த்தை நடத்தினார். ஜெயப்பூரில் சரணடைய மகராஜ் ஒப்புக்கொண்டார்.

சட்டத்தின் பிடியில் இருந்து தாம் தப்ப முடியாது என்பதை பிரதாப் சிங் உணர்ந்தார்.

அவரது நம்பிக்கைக்கு உரிய பகீரத சிங் பின் தொடர அவரது அறைக்கு பிரதாப் சிங் சென்றார்.

அறை உட்பக்கமாக தாளிடப்பட்டது. சிறிது நேரத்தில் துப்பாக்கி குண்டுகள் வெடிக்கும் சத்தம் கேட்டது.

## உடமை வர்க்கம்

ஆம்! மகராஜ் குமார் தற்கொலை செய்து கொண்டார். சரணடைவதைவிட தற்கொலை செய்து கொள்வது மேல் என்று நினைத்தார் போலும்.

உடமைவர்க்க மண்டபத்தின் தூண் ஒன்று சரிந்தது. அந்த வர்க்கத்தின் மண்டபத்தை தாங்கிப் பிடிக்கும் நூற்றுக்கணக்கான தூண்கள் இன்னமும் இருக்கத்தான் செய்கின்றன.

அந்தத் தூண்களும் காலப்போக்கில் சரியத்தான் போகின்றன. அல்லது உடைத்து எறியப்படும்.

உடமை வர்க்கத்தை காப்பதற்காகவே பிறந்த கட்சிகளான சுதந்திரா, ஜனசங்க கட்சிகள் சட்ட சபையில் 'ஓ்கா' என்று கூக்குரலிட்டன. மகராஜ் குமார் தற்கொலை பற்றி நீதிவிசாரணை நடத்த வேண்டும் என்று அந்தக் கட்சிகள் கோரின.

முதல்வர் ஜோஷி இம்மியும் அசையவில்லை. 'தந்தையின் பேச்சையே கேட்காத 'அசட்டு' மகராஜ்குமார் தற்கொலை பற்றி நீதி விசாரணை நடத்தத் தேவையில்லை என்று கூறி அவர்களது கோரிக்கையை முதல்வர் நிராகரித்தார்.

## திருமணம்

சென்னை, ஏப். 22— சி. பச்சையப்ப முதலியாரின் பேரனும், பி. சுப்பிரமணிய முதலியாரின் குமாரனுமாகிய பி. எஸ். பூபதிக்கும எஸ். ரங்கநாத முதலியாரின் குமாரத்தி கோதை நாயகிக்கும். சென்னை லாயிட்ஸ் சாலையிலுள்ள நல்வாழ்வு திருமண மண்டபத்தில் நேற்று (21-ந் தேதி) திருமணம் சிறப்பாக நடந்தது.

குடந்தையில்

# இளைஞர் பெருமன்ற 6-வது மாநாடு

சென்னை, ஏப். 22— அனைத்திந்திய இளைஞர் பெருமன்ற 6-வது மாநில மாநாடு இந்த மாதம் 24 25 தேதிகளில் குடந்தை நகரில் நடைபெறும்.

இந்த மாநாடு குடந்தை டிமிட்ராவ் அரங்கில் (மூர்த்தி கலையரங்கம்) நடைபெறும்.

24-ந் தேதி காலை 9-30 மணிக்கு தோழியர் மணிமேகலை கொடியேற்றிவைப்பார்.

ஜி. கிருஷ்ணன் வரவேற்புரை நிகழ்த்துவார்.

அனைத்திந்திய இளைஞர் பெருமன்ற தலைவரும் நாடாளுமன்ற உறுப்பினருமான சந்திரபபன் மாநாட்டை துவக்கி வைப்பார்.

பெருமன்ற செயலாளர் நாராயண்சின்கா, கம்யூனிஸ்ட் தலைவரான எம். கல்யாணசுந்தரம் கம்யூனிஸ்ட் கட்சி துணை செயலாளர் ப. மாணிக்கம், தா. பாண்டியன், டாக்டர் ராமகிருஷ்ணன், இந்திய தேசிய காங்கிரசை சேர்ந்த தஞ்சை இராமமூர்த்தி, அண்ணா தி. மு. க.வைச் சேர்ந்த இராதா, குணாளன், கம்யூனிஸ்ட் கட்சி மாவட்ட செயலாளர் மாசிலாமணி, வெங்கடாசலம் ஆகியோர் மாநாட்டில் பங்கு கொள்கின்றனர்.

# வெளி நாட்டு பயணிகள் வருகை அதிகரிப்பு

சென்னை, ஏப். 22—கடந்த 3 மாதத்தில் இந்தியாவுக்கு லட்சத்து 23 ஆயிரம் வெளிநாட்டுப் பயணிகள் வந்துள்ளதாக மத்திய சுற்றுலா துறை தனசேகர் ராஜபகதூர் கூறினார்.

கடந்த ஆண்டு இதேகாலத்தில் வந்த சுற்றுலா பயணிகளைவிட இது 8.ு சதவிகிதம் அதிகம் என்று அமைச்சர் கூறினார்.

இந்த ஆண்டு இறுதிக்குள் இந்தியாவுக்கு வரும் சுற்றுப் பயணிகளின் எண்ணிக்கை 5 லட்சத்தைத் தாண்டும் என்று எதிர்பார்ப்பதாகவும் ராஜ்பகதூர் தெரிவித்தார்.

வெளிநாட்டுச சுற்றுலாப் பயணிகளுக்கு இந்தியா செலவு குறைந்த நாடாகும் என்றும் அவர் தெரிவித்தார்.

குடித்தனம் நடத்த மனைவி மறுப்பு

# கணவன் ஆத்திரம்: கத்தியால் குத்தி மாமியார் படுகொலை

கோவை, ஏப். 22— மாமியாரை கத்தியால் குத்தி படுகொலை செய்ததாக மருமகன் கைது செய்யப்பட்டார்.

கொலையான பெண்ணின் பெயர் தேவாத்தாள். அவினாசி தாலூகா அரச்சலூரை சேர்ந்தவள். இவள் தனது மகள் ரங்காத்தாளை (வயது 2?) அதே ஊரைச்சேர்ந்த ராமன் (வயது ?4) என்பவருக்கு 2-ந் தாரமாகக் கொடுத்து இருந்தார்.

கணவன் மனைவி இடையே அடிக்கடி தகராறு ஏற்பட்டதால் தனியாக பிரிந்தனர். பஞ்சாயத்து பேசி ஊரார் அவர்களை சேர்த்து வைத்தனர். மீண்டும் தகராறு ஏற்படவே ரங்காத்தாள் தனது தாய் வீட்டிற்கு சென்று வசித்து வந்தாள்.

சம்பவத்தன்று ரங்காத்தாளும் அவளது தங்கை செல்லம்மாளும் தனது தாயார் தேவாத்தாளுடன் வாய்க்காலுக்குச் சென்று குளித்துவிட்டு வீட்டிற்கு திரும்பி வந்து கொண்டிருந்தனர்.

## கத்திக்குத்து

அப்பொழுது ராமன் அவர்களை சந்தித்து மனைவியை தன்னோடு வரும்படி அழைத்தாராம். மனைவி தன்னுடன் வர மறுக்கவே ஆத்திரம் அடைந்த ராமன் மனைவியை கத்தியால் குத்தினாராம். இதைத் தடுத்த தேவாத்தாளுக்கும், செல்லம்மாளுக்கும் கத்திகுத்து விழுந்தது.

இதில் தேவாத்தாள் பரிதாபமாக செத்தாள்.

ரங்காத்தாளும், செல்லம்மாளும் படுகாயத்துடன் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டனர்

இதையொட்டி ராமன கைதுசெய்யப்பட்டார். அவினாசி உதவி போலீஸ் சூப்பிரெண்டு ராகவன் நாயர் இதுபற்றி மேற்கொண்டு விசாரணை நடத்துகிறார்.

# அதிசயம்: ஆனால் உண்மை

ஜெருசலம், ஏப். 22 மிக அற்புதமான அதிசய நிகழ்ச்சி ஒன்று இஸ்ரேல் நாட்டில் நடந்து கொண்டிருக்கிறது.

மலைப்பாதையில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் தண்ணீர் தானாகவே மேல் நோக்கி ஓடுகிறது. அந்த இடத்தில கால் பந்துகளும் மேல் நோக்கி தானாக ஓடுகின்றன. மற்றொரு அற்புதம் என்னவென்றால் மலை மீதிருந்து கீழ் நோக்கி வரும் மோட்டார் கார்களின் கியர் "நியுட்ரல்" நிலைமையில் இருந்தால், அந்தக் கார்கள் தானாகவே மேல் நோக்கி ஓடுகின்றன.

இலேசில் நம்பமுடியாத இந்த நிழ்ச்சியை டெலிவிஷனில் போட்டுக்காட்டினார்கள்.

தண்ணீர், கால்பந்து. மோட்டார் ஆகியவை தானாகவே மேல் நோக்கி ஓடுவதைக் கண்டு பொதுமக்கள் வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத அளவுக்கு ஆச்சரியப்பட்டனர். இந்த அற்புதம் பெரும் புதிராக இருக்கிறது.

ஜெருசலம் நகரை நோக்கி மலைப்பாதையில் இறங்கும் போது கார் டிரைவர்கள் இந்த அதிசயத்தை ஜபால் முகாபர் என்ற கிராமத்தில் கண்டு ஆச்சரியத்தில் மூழ்கினார்கள்.

# பட்டா கொடுப்பதில் பாரபட்சமா? ராமமூர்த்தி அறிக்கை

சென்னை, ஏப். 22— ஏழைகளுக்கு வீட்டுமனைப் பட்டா கொடுப்பதில் பாரபட்சம் காட்டக்கூடாது என்று செங்கற்பட்டு கம்யூனிஸ்டுக் கட்சி செயலாளர் எம் எஸ். ராமமூர்த்தி கூறியிருக்கிறார்.

இதுசம்பந்தமாக அவர் வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:

மீனம்பாககம் பகுதியில் வாழும் குடிசைவாழ் மககள் மனைக்கு ரூ. 4 ஆயிரம் முதல் ரூ. 8 ஆயிரம் வரை கட்ட வேண்டும் என்று மாவட்ட கலெக்டர் அலுவலகத்திலிருந்து தாக்கீது அனுப்பப்பட்டிருக்கிறது.

வறுமையில் வாடும் மக்கள் இத்தொகையை எவ்வாறு கட்ட முடியும்?

மீனம்பாக்கம் என். ஜி ஓ. காலனியில் சென்ட் ரூ. 25 என்றவகிதத்தில் 1971லேயே பட்டா செய்து கொடுக்கப்பட்டுள்ளது. அப்படியிருக்கும் போது மற்ற பகுதிகளில் இருக்கும் குடிசைவாழ்மககள் மட்டும் அதிக தொகை கட்ட வேண்டும் என்று இப்போது கேடபதில் என்ன நியாயம்?

சென்னையை சுற்றியுள்ள புறநகர்ப் பகுதியில் புறம்போக்கு நிலத்தில் குடியருக்கும் ஏழை மக்களுக்கு அந்த நிலத்தை பட்டா செய்து கொடுக்க வேண்டும் என்று கம்யூனிஸ்டுக் கட்சி தொடர்ந்து போராடி வருகிறது.

தி. மு. க. ஆட்சியில் ஏழை மக்கள் ஏமாற்றப்பட்டார்கள்.

இப்போது பிரதமர் கொண்டுவந்திருக்கும் 20 அம்சத் திட்டம் ஏழைகளின் முன்னேற்றத்துக்காகத்தான் தவிர அவர்களை மேலும படுபாதாளத்தில் தள்ளுவதற்காக அல்ல.

ஆகவே, மாவட்டக் கலெக்டர் போட்டிருக்கும் வசூல் செய்யும் உத்தரவை உடனடியாக நிறுத்திவைக்க வேண்டும் என்று ராமமூர்த்தி தனது அறிக்கையில் கூறியிருக்கிறார்.

# ரூ. 4 லட்சம் முந்திரி பருப்பு பறிமுதல்

கோவை, ஏப். 22— கேரளாவிலிருந்து தமிழ் நாட்டிற்கு கடத்திக்கொண்டு வரப்பட்ட ரூ 4 இலட்சம் மதிப்புள்ள முந்திரி பருப்பு மூட்டைகளை போலீசார் கைப்பற்றினர்கள்.

கேரளாவிலிருந்து தமிழ் நாட்டிற்கு வரும் வழியான பொள்ளாச்சி அருகே போலீசார் நின்றுகொண்டு அவ்வழியாக செல்லும் லாரிகளை சோதனை செய்து வந்தனர்.

அப்பொழுது அவ்வழியே வந்த 5 லாரிகளில் முந்திரி பருப்பு மூட்டைகள் இருப்பதைக் கண்டு பிடித்தனர். இவை கேரளாவிலிருந்து தமிழ்நாட்டிற்கு கடத்திக் கொண்டுவரப்பட்டவை என கூறப்படுகிறது.

இது சம்பந்தமாக 5 லாரிகளையும், அவற்றில் இருந்த முந்திரி பருப்பு மூட்டைகளையும் போலீசார் கைப்பற்றினார்கள். முந்திரி பருப்புகளின் மொத்த மதிப்பு ரூ. 4 லட்சம் ஆகும்.

லாரிகளை ஓட்டிவந்த டிரைவர்கள் அப்பு, அம்சா, மொய்தீன் குட்டி, முகமது, பி. மொய்தீன ஆகிய 5 டிரைவர்களை போலீசார் பிடித்து வணிகவரி உலாகாவிடம் ஒப்படைத்தனர்.

லாரி டிரைவர்களுக்கு தலா 25 ஆயிரம் ரூபாய் அபராதமும் முந்திரி பருப்புகளுக்கான வரியும் விதிக்கப்பட்டது.

இச்சோதனையை கோவை ரூரல் போலீஸ் சூப்பிரெண்டு ரமணி உத்தரவின் பேரில் பொள்ளாச்சி டவுன்போலீஸ் இன்ஸ்பெக்டர் அய்யாசாமி போலீஸ் கோஷ்டியுடன நடத்தினார்.

# சோழன் போககுவரத்து சிறப்பு மாநாடு

தஞ்சாவூர், ஏப். 22— சோழன் போக்குவரத்து கழகத்தின் சிறப்பு மாநாடு இம் மாதம் 18ம் தேதி தஞ்சை குடந்தையில் நடைபெற்றது.

ஏ. ஐ. டி. யு சி. தலைவர்கள் கே. டி. கே. தங்கமணி, கே. எம். சுந்தரம், ஏ. எம். கோபு, சிம்சன தொழிற் சங்கத் தலைவர் ஆர். குச்சலர் ஆகியோர் கலந்து கொண்டு பேசினர்.

தமிழ்நாடு அரசு போக்குவரத்து கழகங்களின் தொழிலாளர் சங்கம் தஞ்சாவூர் மாவட்டக்கிளை நிர்வாகிகள் கீழ்கண்டவாறு தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மன்னை மு. அம்பிகாபதி தலைவராகவும், சி. பவுன்ராஜ், ஆர். ரெகுபதி, கே அந்தோணி சாமி, துணைத் தலைவர்களாகவும் கே. கலியமூர்த்தி பொருளாளராகவும், ஏ. தங்கராஜ். கே. சம்பந்தம், ஆர் கலியமூர்த்தி, ஏ. ஸ்டீபன், எம் பிச்சை, கே. உலகநாதன், முதலிய 31 பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# திட்டக்குழு ஆலோசகர் ஆஸ்பத்திரியில் அனுமதி

சென்னை, ஏப். 22—தமிழக வறட்சி நிலையை நேரில் கண்டறிவதற்காக வந்திருக்கும் எம். பி. காயப்பா திடீர் என்று உடல் நலமில்லாததால் சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருக்கிறார்.

மத்திய திட்டக் கமிஷன் ஆலோசகரான கரியப்பா, வறட்சி நிவாரண ஆய்வுக்குழு தலைவராக வந்திருக்கிறார்.

மருத்துவமனையில் அறுவை சிகிச்சை செய்துகொண்ட கரியப்பா இப்போது தேறி வருகிறார்.

குழுவில் வந்த மற்ற இரண்டு உறுப்பினர்களான எஸ். கே. பானர்ஜியும். வி. ந. ஈஸ்வரனும் சென்னையில் அதிகாரிகளுடன் விவாதித்துவிட்டு 6 நாள் சுற்றுப் பயணம் செய்வதற்காக வறட்சிப்பகுதிகளுக்குப் புறப்பட்டு சென்றனர்.

# என். ஜி ஓ. யூனியன் தேர்தல்: 21 பேர் போட்டி

சென்னை, ஏப். 22— என். ஜி. ஓ. யூனியன் மாநில நிர்வாகிகள் தேர்தலுக்கு 21 பேர் போட்டியிடுகின்றனர்.

இந்த தகவலை அந்த யூனியன் தேர்தல் ஆணையாளர் எபினேசர் வெளியிட்டு உள்ளார். தலைவர் பதவிக்கு சிவ. இளங்கோவும், சேலம் பழனியாண்டியும் போட்டியிடுகின்றனர்.

நகர்புற துணைத் தலைவர் பதவிக்கு கால் நடை கல்லூரியை சார்ந்த ஜகன்னாதன், டிப்டி தாசில்தார் பா. சு. மணி, வேளாண் துறை தாமோதரன் ஆகியோர் வேட்பு மனுக்களை தாக்கல் செய்துள்ளனர்.

வெளியூர் துணைத்தலைவர் பதவிக்கு தர்மபுரி ஜெகதீசன் திருச்சி சிவராம கிருஷ்ணன், குடந்தை நாகநாதன், கிருஷ்ணகிரி நாராயணராவ், தஞ்சை நாராயணசாமி சேலம் பழனியாண்டி ஆகியோர் போட்டியிடுகின்றனர்.

அமைப்பு செயலருக்கு சுப. சீதாராமன், துரை சிங்கம், கண்ணன், விசுவாசம், நவநீதகிருஷ்ணன், ஜெகதீசன், நடேசன், நாராயணராவ் ஆகியோரும் பொருளாளர் பதவிக்கு எம். புண்ணியகோடி என். சுப்பிரமணியம் ஆகியோரும் வேட்பு மனு தாக்கல் செய்துள்ளனர்.

இந்த மாதம் 29 ந் தேதி தேர்தல் நடைபெற உள்ளது.

# ஏகாட்டூர் கூலி உயர்வு ஒப்பந்தம்

திருவள்ளூர், ஏப். 22— திருவள்ளூரை அடுத்த ஏகாட்டூர் விவசாயத் தொழிலாளர்களின் கூலி உயர்வு ஒப்பந்தம் தாசில்தார் முன்னிலையில் கையொப்பமானது.

அரசு நிர்ணயம்செய்த கூலி உயர்வினைக் கொடுக்க நிலச் சுவான்தார்கள் பணமாகக் கொடுக்க ஒப்புக்கொண்டனர். உழவுக்கு 9 ரூபாயும் விதைத்தல், நாற்றுப் பிடுங்கலுக்கு 5 ரூபாயும், களை எடுத்தல், நடவு நடுதலுக்கு 3 ரூபாய் 50 பைசாவும் கொடுக்கப்படும்.

விவசாயத் தொழிலாளர் சார்பாக ஆர். அரங்கண்ணல் வழக்கறிஞர் அங்குசாமி, மாவட்ட கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் எம். எஸ். ராமமூர்த்தி ஆகியோர் கலந்து கொண்டனர்.

உழைக்கும் மக்கள் மாமன்றப் பொதுச் செயலாளர் ஜி. முத்து. உத்தரகுமார், வேதாசலம் ஆகியோர் சுமுக உடன்பாடு ஏற்பட ஒத்துழைத்தனர்.

# மதுரை-ராமநாதபுரம் காங்கிரஸ் வழக்கறிஞர்கள் சங்கம்

மதுரை, ஏப். 22— மதுரை ராமநாதபுரம் காங்கிரஸ் வழக்கறிஞர் சங்கத்துக்கு நடைபெற்ற தேர்தலில் கீழ்க்கண்டவர்கள் நிர்வாகிகளாக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கூட்டத்துக்கு ஆர். செல்லத்தேவர் தலைமை வகித்தார்.

தலைவர்: எம். எஸ். முத்து. துணைத் தலைவர்கள் சுபா. ராமச்சந்திரன், ஆர். ராமச்சந்திரன், என். எஸ். பொன்னையா, எஸ். பழனி, குமாரசாமி; செயலாளர்: பி. ராஜேந்திரன், துணைச் செயலாளர்கள்: கி. மனோகரன், எஸ். சிங்கராஜன, கே. வேலுச்சாமி, ஏ. லோகநாதன்: பொருளாளர்: எஸ். ராமசாமி, செயற்குழு உறுப்பினர்களாக எஸ். பழனிசாமி, ஆர். செல்லத்தேவர் உட்பட 21 பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

Printed by S. V. G. Sowrirajulu, at the M.C. P.P.S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Editor:

K. SOMASUNDAR;

(SOLAI)